தஞ்சாவூர் சரசுவதி மகால் வெளியீட்டு எண். 397

# ।। विमानार्चनकल्पः ।।

# விமானார்ச்சன கல்பம்

தொகுதி - 1

தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்

**சரசுவதி மகால் நூலகம்,**

தஞ்சாவூர்

Thanjavur Sarasvati Mahal Series No.397

॥ श्री ॥

मरीचिमहर्षि विरचितः

# ॥ विमानार्चनकल्पः ॥

# விமானார்ச்சன கல்பம்

தொகுதி - 1


பதிப்பாசிரியர்

ஸ்ரீவைகானஸ பகவத் சாஸ்த்ர ப்ரவீண. ஆகம விசாரத.
ந்யாய சிரோமணி

**எஸ். சுதர்ஷன்,** எம். ஏ., எம். எல். ஐ. எஸ்.,
நூலகர் II
சரசுவதி மகால் நூலகம், தஞ்சாவூர்.



தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்

**சரசுவதி மகால் நூலகம்,**

தஞ்சாவூர்

2005 விலை : ரூ. 50-00

# நூற்பதிப்பு விளக்கக் குறிப்பு


| | | |
|---|---|---|
| நூற்பெயர் | : | விமானார்ச்சன கல்பம் (தொகுதி - 1) |
| பதிப்பாசிரியர் | : | எஸ் சுதர்ஷன், M. A., M. L. I. S., |
| வெளியிடுபவர் | : | இயக்குநர். சரசுவதி மகால் நூலகம் |
| வெளியீட்டு எண் | : | 397 |
| மொழி | : | சமஸ்கிருதம் - தமிழ் |
| பதிப்பு | : | இரண்டாம் பதிப்பு |
| வெளியீட்டு நாள் | : | செப்டம்பர், 2005 |
| தாள் | : | TNPL 18.6 kgs. |
| நூல் அளவு | : | 21 x 14 c. m. |
| பக்கங்கள் | : | 160 |
| படிகள் | : | 1000 |
| எழுத்து | : | 16 & 12 |
| அச்சிட்டோர் | : | ஒளியச்சு மற்றும் ஒளியச்சுக்கோப்பு சரசுவதி மகால் நூலகம் |
| புத்தகக்கட்டு | : | மெலிந்த அட்டை |
| பொருள் | : | ஸ்ரீவைகானஸ ஆகமம் |
| பகுப்பு எண் | : | Q125:4x6,1 |
| விலை | : | ரூ. 50-00 |

# வெளியீட்டாளர் முகவுரை

சைவத் திருக்கோயில்களின் கட்டுமானங்களில் தொடங்கி நித்ய பூஜை, விழாக்கள், திருக்குட நன்னீராட்டு, கடவுள் மங்கலம் பேணுதல் ஆகிய பல்வேறு கிரியைகளுக்கு அடிப்படை நூல்களாக விளங்குபவை 28 சைவ ஆகம நூல்களாகும். அதுபோலவே வைணவத் திருக்கோயில்களுக்கு வைகானஸம், பாஞ்சராத்ரம் என்று இரண்டு ஆகம நூல்கள் ஆதார நூல்களாக விளங்குகின்றன. வைகானஸ ஆகமத்தின் ஒரு அங்கமாக விளங்குவதே விமானார்ச்சன கல்பம் எனும் இந்நூலாகும். சமஸ்கிருத மூலபாடம், அதன் தமிழ் ஒலிபெயர்ப்பு மற்றும் தமிழ் விளக்கம் ஆகியவற்றுடன் இந்நூல் மலர்ந்துள்ளது. சரசுவதி மகால் நூலகத்தின் இரண்டாம் நிலை நூலகரான திரு. எஸ். சுதர்ஷன் இதன் பதிப்புப் பணியை செம்மையுற செய்துள்ளார்.

இரண்டாம் பதிப்பு காணும் இந்நூலின் பதிப்பாசிரியரைப் பாராட்டுவதோடு, இந்நூல் வெளிவருவதற்குத் துணைநின்ற நிருவாக அலுவலர் திரு. இரா. சுப்பிரமணியன் மற்றும் நூலக வெளியீட்டு மேலாளர் முனைவர் குடவாயில் பாலசுப்ரமணியன் ஆகியோர்க்கும், இந்நூலினைச் செம்மையாக அச்சிட்டுத் தந்துள்ள நூலக கணினிப் பிரிவுப் பணியாளர்களுக்கும் என் பாராட்டுக்கள்.

இந்நூலை வெளியிடத் தேவையான நிதியுதவியினை நல்கிய நடுவண் அரசுக்கு என் நன்றியை உரித்தாக்குகின்றேன்.

மா. வீரசண்முகமணி, இ. ஆ. ப.
மாவட்ட ஆட்சித்தலைவர்
மற்றும் இயக்குநர்,
சரசுவதி மகால் நூலகம்.

தஞ்சாவூர்
2-9-2005



।। श्रीः ।।

।। श्रीमद्विखनसमहागुरवे नमः ।।

# முகவுரை

श्रीवेङ्कटेशं लक्ष्मीशं गर्भवैष्णव सेवितम् ।
नमामि विष्णुं देवेशं सर्वकाम्य हितप्रदम् ।।

नमस्त्रिभुवनोत्पत्तिस्थितिसंहार हेतवे ।
विष्णवेऽपारसंसारपारोत्तरणसेतवे ।

नारायणस्य यस्यात्मा विखना इति वर्तते ।
वेदवेदाङ्ग तत्वज्ञं तं वन्दे विखनोमुनिम् ।।

ஸ்ரீவேங்கடேசம் லக்ஷ்மீசம் கர்பவைஷ்ணவ ஸேவிதம் ।
நமாமி விஷ்ணும் தேவேசம் ஸர்வகாம்ய ஹிதப்ரதம் ॥

நமஸ்த்ரிபுவனோத்பத்திஸ்திதிஸம்ஹார ஹேதவே ।
விஷ்ணவேऽபாரஸம்ஸாரபாரோத்தரணஸேதவே ॥

நாராயணஸ்ய யஸ்யாத்மா விகனா இதி வர்த்ததே ।
வேதவேதாங்க தத்வக்ஞம் தம் வந்தே விகனோமுனிம் ॥

இவ்வுலகில் வாழும் ஒவ்வொருவருக்கும் 'அனைத்தும் ஒன்று' என்ற மனப்பக்குவம் வருவதற்கு முன்க்ஷணம் வரையிலும் இன்றியமையாத ஒன்றாகத் திகழ்வது ஸனாதன தர்மமாகும். ஸனாதன தர்மத்திற்கு அடிப்படையாகத் திகழ்வது வேதமாகும். வேத சாஸ்த்ரம் என்பது 'ரிக், யஜுஸ், ஸாமம், அதர்வணம்' என்ற நான்கு வேதங்கள்; சிக்ஷா, கல்போ, வ்யாகரணம், நிருக்தம், சந்தோ, ஜ்யோதிஷம் என்ற ஆறு வேதாங்கங்கள் மற்றும் புராணம், தர்மஸூத்ரம், ந்யாயம், மீமாம்ஸம் ஆகிய நான்கு - ஆக மொத்தம் பதினான்கு எனக்கூறுவர் சான்றோர்.

வேதங்கள்

"विव्यास वेदान् - वेदव्यासः - வில்யாஸ வேதான்-வேதவ்யாஸ: ஒன்றாக இருந்த வேதத்தை நான்காகப் பிரித்தவர் வ்யாஸ மஹரிஷியாவர். வேதத்தைப் பிரித்ததால் இவருக்கு "வேதவ்யாஸர்" என்று பெயர் வழங்கலாயிற்று. அவரால் பிரிக்கப்பட்ட (இன்று நடைமுறையிலுள்ள) நான்கு வேதங்களில் பல உட்பிரிவுகள் உள்ளன. அவற்றில் (வேதத்தில்) கூறப்படும் விஷயங்கள் அனைத்தும் ஸத்யமாகும். மேலும் இதில் பயனற்றதாக ஒரு எழுத்துக்கூட சொல்லப்பட வில்லை எனில், அது மிகையாகாது. எனவேதான் உலகில் வேறு எந்த நூல்களுக்கும் இல்லாத தனிச்சிறப்பை வேதங்கள் பெற்றிருக்கின்றன. வேதத்தின் நித்யத்துவத்தையும்; சிறப்பையும் பூர்வமீமாம்ஸா சாஸ்திரமானது தனது முதல் அத்யாத்தில், எட்டாவது அதிகரணத்தில் (வேதாபௌருஷேயத்வாதிகரணம்) மிகத் தெளிவாகப் பேசுகிறது.

மஹாபாரதம் என்ற நூலானது பாரத: பஞ்சமோ வேத: என்னும் வாக்கிற்கிணங்க ஐந்தாவது வேதமாகக் கொள்ளப் படுகிறது.

ஸ்ரீவைகானஸ திவ்ய பகவத் சாஸ்த்ரம் அறிந்த பெரியோர்கள் வேதத்தில் சொல்லியுள்ளபடி மந்த்ரங்களைச் சொல்லி ஆவாஹனம் செய்து பூஜை முறைகளை மேற்கொண்டு நல்ல பலனையும் அடைந்திருக்கிறார்கள். உதாரணமாக வருண ஜபம் செய்து மழை பொழியும்படியும்; வேறு சில மந்த்ரங்களைச் சொல்லி (ஜபம் செய்து) சரீரத்திலுள்ள உபாதைகளைப் போக்கியுள்ளார்கள். இவைகளை நன்றாகச் செய்வதற்காகவும், பூஜைகளை மேற்கொள்வதற்காகவும் எழுந்தவையே வேதத்தின் அங்கங்களில் ஒன்றான கல்ப ஸூத்ரங்களாகும்.

பொதுவாக கல்ப ஸூத்ரங்கள்; ஸாமான்ய மனிதர்கள் வேதத்தின் அடிப்படையில் செய்யவேண்டிய நாற்பது ஸம்ஸ்காரங்களைப்பற்றி எடுத்துரைக்கின்றன. அவற்றில்

ச்ரௌதஸூத்ரங்கள், ஸ்மார்த்த ஸூத்ரங்கள், தர்மஸூத்ரங்கள் என்ற மூன்று பிரிவுகள் உண்டு. இவை மூன்றையும் கொண்டவையே பூர்ணகல்ப ஸூத்ரம் என்பதாகச் சான்றோர்களால் ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ளது. பூர்ணமான கல்ப ஸூத்ரங்களின் வரிசையில் ஸ்ரீவைகானஸ கல்ப ஸூத்ரமும் ஒன்றாகும்.

[1]श्रौतस्मार्ताधिकं कर्मनिखिलं येन सूत्रितम् ।
तस्मै समस्त वेदार्थविधे विखनसे नमः ।।
श्रुतिस्मृति नदीपूर्ण शास्त्रकल्लोल सङ्कुलम् ।
विष्णु भक्त्युदकं शुद्धं वन्दे श्रीविखनार्णवम् ।।

ச்ரௌதஸ்மார்த்தாதிகம் கர்மநிகிலம் யேந ஸூத்ரிதம் ।
தஸ்மை ஸமஸ்த வேதார்த்தவிதே விகனஸே நம:॥
ச்ருதிஸ்ம்ருதி நதீபூர்ணம் சாஸ்த்ரகல்லோல ஸங்குலம் ।
விஷ்ணு பக்த்யுதகம் சுத்தம் வந்தே ஸ்ரீவிகனார்ணவம் ॥

ச்ரௌதகர்மா, ஸ்மார்த்தகர்மா முதலிய அனைத்தையும் தனது ஸூத்ரத்தின் மூலம் சொன்னவரும், அனைத்து வேதங்களின் பொருளையும் அறிந்தவருமான விகனஸரின் பொருட்டு நமஸ்காரம்

ச்ருதி, ஸ்ம்ருதி என்ற நதிகளாலும், சாஸ்த்ரங்களாலும், விஷ்ணுபக்தி என்ற சுத்தமான தீர்த்தத்தாலும் நிரம்பி உள்ளதான விகனஸர் என்ற கடலை நான் வணங்குகின்றேன்.

ஸ்ரீமத்விகனஸாசார்யன் தனது கல்ப ஸூத்ரத்தில் தைவிக, மானுஷிக விஷயங்கள் அனைத்தையும் தெளிவாகவும், அன்யஸூத்ரானபேக்ஷிதமாகவும் கூறியுள்ளார் என்பது கருத்து.

[2]वैखानसेन मुनिना द्वात्रिंशत्प्रश्न शङ्ख्यया ।

---

1. श्रीमद्विखनसाचार्यस्तोत्रपाठः ஸ்ரீமத்விகனஸாசார்யன் ஸ்தோத்ர பாடம்.
2. आनन्दसंहिता - सप्तदशोऽध्यायः ।
ஆனந்தஸம்ஹிதையில் 17ஆவது அத்யாயம்.

निषेकादि श्मशानान्तं मानुषं कर्मसूचितम् ।।
सूत्रं विखनसप्रोक्तं सार्धकोटि प्रमाणकम् ।
कर्षणाद्युत्सवार्थञ्च दैविकं तेन सूचितम् ।।

गुरुमुखाच्च सङ्गृह्य तत्सर्वं समुदाहृतम् ।
काश्यपेनात्रिणाचैव मया च भृगुणा तथा ।।
चातुर्लक्षप्रमाणेन सङ्क्षिप्य प्रोच्यतेऽधुना ।।

வைகானஸேன முனினா த்வாத்ரிம்சத் ப்ரச்ன ஸங்க்யயா ।
நிஷேகாதி ச்மசானாந்தம் மானுஷம் கர்மஸூசிதம் ॥

ஸூத்ரம் விகனஸப்ரோக்தம் ஸார்தகோடி ப்ரமாணகம் ।
கர்ஷணாத்யுத்ஸவார்தஞ்ச தைவிகம் தேனஸூசிதம் ॥

குருமுகாச்ச ஸங்க்ருஹ்ய தத்ஸர்வம் ஸமுதாஹ்ருதம் ।
காச்யபேனாத்ரினாசைவ மயா ச ப்ருகுணா ததா ॥
சாதுர்லக்ஷப்ரமாணேன ஸங்க்ஷிப்ய ப்ரோச்யதேऽதுனா ॥

''नारायणस्य यस्यात्मा विखना इति वर्तते ।''

"நாராயணஸ்ய யஸ்யாத்மா விகனா இதி வர்த்ததே। "
என்ற வாக்யத்திற்கிணங்க - பகவான் ஸ்ரீமந்நாராயணனின் ஆத்மாவே வடிவமாக வந்த விகனஸரால் ஏற்படுத்தப்பட்ட இந்த ஸ்ரீவைகானஸ கல்பஸூத்ரமானது 32 ப்ரச்னங்கள் கொண்டது. அவற்றில் நிஷேகம் முதல் ச்மசானம் வரையில் உள்ள மானுஷிக கர்மாக்களைத் தானே கூறியும், கர்ஷணாதி உத்ஸவம் வரையிலும் தைவிக விஷயங்களைத் தனது மரீசி முதலான சிஷ்யர்கள் மூலம் 1½ கோடி க்ரந்தத்தையும் அனுக்ரஹித்தார். அவ்வாறு பெறப்பட்ட 1½ கோடி க்ரந்த பரிமாணமுள்ள இந்த ஸ்ரீவைகானஸ பகவத்சாஸ்த்ரத்தை நான்கு லக்ஷமாகச் சுருக்கிக் கூறினார்கள். (மரீசி - 1,84,000 க்ரந்தங்கள்; ப்ருகு 64,000 க்ரந்தங்கள், காச்யபர் - 64,000 க்ரந்தங்கள்; அத்ரி - 88,000 க்ரந்தங்கள்).

விகனஸரின் சிஷ்யர்களில் ஒருவரான மரீசி மஹரிஷியால் சொல்லப்பட்டவை ஜய, ஆனந்த, ஸம்ஞான, வீர, விஜய, விஜித, விமல, கல்பஸம்ஹிதா என்பதான எட்டு ஸம்ஹிதைகளாகும். இவை மொத்தம் 1,84,000 க்ரந்த ஸங்க்யையை உடையதாகும். இவற்றில் இரண்டாவதாகச் சொல்லப்பட்டுள்ள ஆனந்த ஸம்ஹிதையில் விமானார்ச்சன கல்பமும் அடங்கும்.

**விமானார்ச்சன கல்பம்**

அர்ச்சித்தல் (பூஜித்தல்) உருவம், அருவம் என இருவகைப்படும். உருவ வழிபாட்டை

[1]अर्चावताररूपेण लोकेस्मिन् चतुरानन ।
अवतारं करिष्यामि ह्रियालक्ष्म्या समन्वितः ॥

அர்ச்சவதாரரூபேண லோகேஸ்மின் சதுரானன ।
அவதாரம் கரிஷ்யாமி ஹ்ரியாலக்ஷ்ம்யா ஸமந்வித: ॥

என்ற வாக்யத்திற்கிணங்க தானே ஸங்கல்பித்துக்கொண்டு,

("भगवानेव स्वस्मै स्वप्रीतये स्वयमेव कारयति।

"பகவானேவ ஸ்வஸ்மை ஸ்வப்ரீதயே ஸ்வயமேவ காரயதி") திவ்யமங்கள விக்ரஹமாக தன் நிலையிலிருந்து இறங்கி ஸ்ரீதேவிபூதேவியுடன் அவதரித்து தன்னை பூலோகத்தில் ஸாஸ்வதமாக ஏற்படுத்திக் கொண்டான்.

இந்த அர்ச்சனா விசேஷத்தை மரீசியானவர் உயர்ந்ததான[2] ஜ்யோதி ஸ்வரூபமான ப்ரம்மவஸ்துவாக இருக்கின்ற அழிவற்றதுமான, எல்லா ஜீவன்களிலும் ஆத்மாவாக இருக்கின்ற, எல்லாவற்றிற்கும் ஆதாரமாக விளங்குகிற, எல்லோரையும் காப்பவராக விளங்குபவருமாகிய பரமபுருஷனை (விஷ்ணுவை) அர்ச்சிக்கவேண்டும். இதுவே **விமானார்ச்சனம்** என்பதாகக் கூறுகிறார்.

---

1. अर्चनानवनीतम् । அர்ச்சனா நவனீதம்
2. विमानार्चनकल्पम् । விமானார்ச்சனகல்பம்.

விமானார்ச்சன கல்பம் என்னும் இந்நூல் 101 படலங்களைக் கொண்டது. தற்பொழுது முதல் பத்து படலங்கள் மட்டும் தமிழ் மொழிபெயர்ப்புடன் வெளிவருகிறது.

சுவடி பற்றி

இதன் மூலச்சுவடி B. 3652- D. 15344 என்ற எண்ணில் இந்நூலக ஸம்ஸ்க்ருதப் பிரிவில் பதிவாகியுள்ளது. மேலும் வைகானஸ தந்த்ரம் என்பதாகத் தவறாகப் பதிவாகியுள்ளது. இந்நூலுக்குச் சரியான பெயர் விமானார்ச்சன கல்பம் என்பதாகும். இச்சுவடியில் ஒவ்வொரு படலமும் முடியும் பொழுதும்

इति श्रीवैखानसे मरीचिप्रोक्ते विमानार्चनकल्पे प्रथमः पटलः । द्वितीयः पटलः । . . . . .

இதி ஸ்ரீவைகானஸே மரீசிப்ரோக்தே விமானார்ச்சன கல்பே ப்ரதம: படல:। த்விதீய: படல:॥ . . . . என்பதாகத் தெளிவாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. இந்த வாக்கியத்தின் மூலம் நூலின் பெயரும், ஆசிரியரின் பெயரும் சொல்லப்பெற்றுள்ளமை குறிப்பிடத் தக்கதாகும். இது 14 x 5.3 என்ற நீள அகலம் உடையதாகவும்; காகிதச் சுவடியாகவும் உள்ளது. தேவநாகரி எழுத்தில் எழுதப்பட்டதாகவும், பல இடங்களில் பூச்சியால் அரிக்கப்பட்டதாகவும், தவறுகள் நிறைந்தும், முழுமையற்ற தாகவும் உள்ளது. ஒரு பக்கதத்திற்கு பத்து வரிகளும், ஒரு வரிக்கு ஐம்பது எழுத்துக்களும் உள்ளன.

**பதிப்பும் பயனும்**

இது ஸ்ரீவைகானஸ பகவத் சாஸ்த்ர நூலாக இருப்பதால் இதனைத் தமிழ் மொழியில் மொழிபெயர்த்தும், ஸம்ஸ்க்ருத எழுத்துக்கள் ஒன்றுமே தெரியாதவர்களும் படித்துப் பயன்பெறும் பொருட்டும் தமிழ் வரிவடிவத்தில் மூலத்தையும் தந்து பதிப்பிக்கப்பட்டுள்ளது. இது அனைத்து ஆகம சாஸ்த்ர நூல்களின் ஆராய்ச்சிக்கும் பெரிதும் உதவும் என்பது திண்ணம்.

நன்றி நவிலல்

இந்நூலிற்கான வெளியீட்டாளர் முகவுரையை வழங்கிய மாவட்ட ஆட்சியர் மற்றும் நூலக இயக்குநர் உயர்திரு. து. நா. இராமநாதன், இ.ஆ.ப. அவர்களுக்கு என் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன். இந்நூலைப் பதிப்பிக்க ஆணை வழக்கிய நூலக நிருவாக அலுவலர் திரு. நா. தியாகராஜன் அவர்களுக்கும், பதிப்பிக்க ஊக்கமளித்த நூலக வெளியீட்டு மேலாளர் திரு அ. பஞ்சநாதன் அவர்களுக்கும் என் நன்றியை உரித்தாக்கி மகிழ்கிறேன். இந்நூல் பிழையின்றி வெளிவரச் செம்மையாக நுண்ணாய்வு செய்து அளித்தவரும், ஸம்ஸ்க்ருத இலக்கணத்தில் சிரோமணி பட்டம் பெற்றவரும்; ஸ்ரீவைகானஸ திவ்ய பகவத் சாஸ்த்ர வித்வானும் அடியேனது ஆசார்யனுமான கடுக்கலூர் ஸ்ரீமான் ஸ்ரீஉ.வே.S. ஸ்தலசயன பட்டாச்சாரியார் ஸ்வாமி அவர்களுக்கு என் தண்டவத் ப்ரணாமத்தோடு கூடிய தன்யவாதங்களைத் தெரிவித்துக் கொள்கிறேன். இப்பதிப்பிற்கு உதவிசெய்தவரும், என்னுடைய சிறிய ப்ராதாவுமான சங்கேந்தி, ந்யாய சிரோமணி முனைவர். S முத்து, M. A., M. L. I. S., B. Ed., Ph. D., அவர்களுக்கும், இந்நூலைச் செம்மையாக அச்சிட்டுத்தந்த இந்நூலக அச்சகப் பிரிவினர் அனைவருக்கும் எனது ஹ்ருதயபூர்வமான நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

எஸ். சுதர்ஷன்,
ஸம்ஸ்க்ருத பண்டிட்
சரசுவதி மகால் நூலகம்.

தஞ்சாவூர்
24 - 12 - 98

## ।। विषयानुक्रमणिका ।।

## விஷயானுக்ரமணிகா

# OUR OTHER PUBLICATIONS

| | | |
|---|---|---|
| Nauka Charitram | Sanskrit & Tamil | 30-00 |
| Sita Kalyanam | Sanskrit & Tamil | 35-00 |
| Gayatri Kosam | Sanskrit & Tamil | 30-00 |
| Ragaratnakaram | Sanskrit & Tamil | 15-00 |
| Dhanyakumaracharitram (Dharmaneri Kathai) | Sanskrit & Tamil | 44-00 |
| Kandukapura Mahatmyam | Sanskrit & Tamil | 25-00 |
| Ramachinthamani Aaruudam (Nandinagari Catalogue) | Sanskrit & Tamil | 25-00 |
| Vruttaratnavali (Chandas Sastram) | Sanskrit & Tamil | 30-00 |
| Kalanandakam | Sanskrit & Tamil | 55-00 |
| Prabodha Chandrika (Grammer) | Sanskrit & Tamil | 70-00 |
| Sirungarakosam | Sanskrit | 12-00 |
| Vedasara Siva Sahasram | Sanskrit | 80-00 |
| Stotra Ramayanam | Sanskrit | 25-00 |
| Mukunda Vilasam | Sanskrit | 35-00 |
| Vinatananda Vyayoga | Sanskrit | 40-00 |
| Kumaresa Satakam | Tamil | 65-00 |
| Lokaswarupam | Tamil | 75-00 |
| Kanakkathikaram | Tamil | 150-00 |
| ThiruvappanurPuranam | Tamil | 50-00 |
| Sowmiya Sagaram | Tamil | 70-00 |
| Jatakachandrika | Tamil | 40-00 |
| Marathi Lavani Songs | Marathi | 35-00 |
| Nakshatra Chinthamani (Part - I) | Tamil | 200-00 |
| Nakshatra Chinthamani (Part - II) | Tamil | 100-00 |

# வேண்டுகோள்

கருணையுள்ளங்கொண்ட நம் முன்னோர்கள் அரிய பெரிய இலக்கியங்களையும், பிறவற்றையும் பனை ஓலைகளில் எழுதிச் சுவடிகளாக நமக்குத் தந்தனர். அவை பல்வேறு இடங்களில் முடங்கி உள்ளன. சுவடிகள் பழுதடைவதற்குமுன் சரஸ்வதி மகாலுக்கு அன்பளிப்பாகக் கொடுத்துதவினால், அவை மக்களுக்குப் பயன்படும்.

மகாலுக்குக் கொடுப்பதன் மூலம், சுவடி தந்தவர்களும், சுவடி எழுதியோரும் அழியாப்புகழை, பெருமைசால் சரஸ்வதி மகால் உள்ளளவும் பெறுவர். அவை பதிப்பாகி வருமாயின் சுவடி தந்தார் பெயர் இடம்பெறுவதோடு, அப்பதிப்பில் ஐந்து பிரதிகளும் பெறுவர்.

எனவே, நாம் பெற்ற பேறு பெறுக இவ்வையகம் என்ற எண்ணமுடைய நற்பண்பாளர்கள் தம்மிடமுள்ள சுவடிகளைச் சரஸ்வதி மகாலுக்குத் தந்துதவ வேண்டுகிறேன்.

சரஸ்வதி மகால் நூலகம்,
தஞ்சாவூர்

மாவட்ட ஆட்சித்தலைவர்
மற்றும் இயக்குநர்

।। श्रीः ।।

।। श्रीमद्विखनसमहागुरवे नमः ।।

# ।। विमानार्चन कल्पः ।।

# விமானார்ச்சன கல்ப:

## ।। प्रथमः पटलः ।।

### मङ्गलाचरणम्

सुक्लाम्बरदरं देवं शशिवर्णं चतुर्भुजम् ।
प्रसन्न वदनं ध्यायेत् सर्वविघ्नोपशान्तये ।।

சுக்லாம்பரதரம் தேவம் சசிவர்ணம் சதுர்புஜம் ।
ப்ரஸன்ன வதநம் த்யாயேத் ஸர்வவிக்னோபசாந்தயே ॥

மங்களாசரணம்

தூய்மையான வஸ்த்ரத்தைத் தரித்தவரும் (அணிந்த வரும்), சந்திரனைப்போன்ற ஒளியுடையவரும், நான்கு கைகளையுடையவரும், மலர்ந்த முகமுடையவருமான எம்பெருமானை (ஸ்ரீமந்நாராயணனை) அனைத்து இடையூறுகளிலிருந்தும் காப்பதின் பொருட்டு ஆசிரியர் (த்யானிக்கிறார்) வணங்குகிறார்.

### मरीचिं प्रति ऋषि प्रश्नः-

ऋषयः - मरीचिं महामुनिश्रेष्ठं स्वशिष्यार्पित कुशासने समासीनं नानालोक निवासिनः धर्मसत्तार्षयः समागम्य अभिवाद्य भगवन् ! केन मार्गेण कैर्मन्त्रैः कं देवं अर्चयन्तः कान्लोकान् गमिष्यन्ति इत्यूचुः ।।

**மரீசிம் ப்ரதி ரிஷி ப்ரச்ன:**

ரிஷய: - மரீசிம் மஹாமுநி ச்ரேஷ்டம் ஸ்வசிஷ்யார்பித குசாஸனே ஸமாஸீனம் நாநாலோக நிவாஸின: தர்மஸத்தார்ஷய: ஸமாகம்ய அபிவாத்ய பகவன் ! கேன மார்கேண கைர்மந்த்ரை: கம் தேவம் அர்ச்சயந்த: கான்லோகான் கமிஷ்யந்தி இத்யூசு;

**மரீசியைக் குறித்து ரிஷிகளின் கேள்வி**

ரிஷிகள் - மஹாமுனி ச்ரேஷ்டராயும், மரீசி என்று ப்ரஸித்தமானவராயும், தன் சிஷ்யர்களால் போடப்பட்ட தர்பாஸனத்தில் அமர்ந்தவராகவும் இருக்கிற முனிவரை பல உலகங்களிலும் இருக்கிற தர்மத்தில் ஈடுபாடுடைய ரிஷிகள் வந்து வணங்கி 'ஸ்வாமியே ! எந்த வழியால், எந்த மந்த்ரத்தால், எந்த தேவதையை அர்ச்சித்தால் எந்த லோகங்களை (ஜனங்கள்) அடைகின்றார்கள்" என்று கேட்டனர்.

**मरीच्युक्तमुत्तरम् -**

मरीचिरुवाच - प्रसन्नं परमात्मानं नारायणं ध्यात्वाऽभिवाद्य श्रुत्यानुकूलमार्गेण चतुर्वेदोद्भवैः मन्त्रैः देवेशं भगवन्तं नारायणमर्चयेत् । श्रुतिभिः अभिहितं शाश्वतं अतीन्द्रियं परात्परतरं देवैरप्यनतिलक्ष्यं तद्विष्णोः परमंपदम(गच्छेयुः)वाप्नोति ।।

**மரீச்யுக்தமுத்தரம் -**

மரீசிருவாச - ப்ரஸன்னம் பரமாத்மானம் நாராயணம் த்யாத்வாऽபிவாத்ய ச்ருத்யானுகூலமார்கேண சதுர்வேத உத்பவை: மந்த்ரை: தேவேசம் பகவந்தம் நாராயணமர்ச்சயேத். ச்ருதிபி: அபிஹிதம் சாச்வதம் அதீந்த்ரியம் பராத் பரதரம் தேவைரப்யனதிலக்ஷ்யம் தத்விஷ்ணோ: பரமம் பதம(கச்சேயு:) வாப்நோதி.

மரீசியால் சொல்லப்பட்ட பதில்

மரீசி கூறினார் - மலர்ந்த முகமுடைய பரமாத்மாவான நாராயணனை த்யானித்து, வணங்கி (அர்ச்சிக்கவேண்டும்) ப்ரஜைகள் ஆராதிக்கவேண்டும். (இவ்வாறு ஆராதிப்பதால்) வேதங்களால் போற்றப்பெற்றதாயும், நிலையானதும், இந்த்ரியங்களால் அறியப்படாதவராயும், எல்லாவற்றிற்கும் மேலானவராயும், தேவர்களால் அறியமுடியாதவருமான அந்த விஷ்ணுவினுடைய உயர்ந்த லோகத்தை (ஸ்ரீவைகுண்டத்தை) அடைவார்கள்.

## विष्णोः सर्वोत्तमत्वे श्रुतिः -

अग्निर्वैदेवानामवमो विष्णुः परमः तदन्तरेण सर्वाण्यादेवता इति ब्राह्मणं, यस्मात्परं नापरमस्ति किञ्चित् यस्मान्नाणीयो नज्जायोस्ति कश्चदृक्ष इवस्तद्धेतोदिवित्तिष्ठत्वेकः तेनेदं पूर्णं पुरुषेण सर्वं इति ।।

### விஷ்ணோ: ஸர்வோத்தமத்வே ச்ருதி:

அக்னிர்வைதேவானாமவமோ விஷ்ணு: பரம: ததந்தரேண ஸர்வாண்யா தேவதா இதி ப்ராம்மணம், யஸ்மாத்பரம் நாபரமஸ்தி கிஞ்சித் யஸ்மான் நாணீயோ நஜ்ஜாயோஸ்தி கச்சத்ருக்ஷ இவஸ்தத்தேதோதிவித்திஷ்டத்வேக: தேனேதம் பூர்ணம் புருஷேண ஸர்வம் இதி ॥

### விஷ்ணுவே எல்லாவற்றிற்கும் மேலானவர் (உயர்ந்தவர்) என்பதற்கு வேத வாக்கியங்கள்

வேத பாகமாகிய ப்ராம்மணத்தில் 'அக்னியானவன் தேவர்களுக்கெல்லாம் சிறியவன். விஷ்ணுவானவர் தேவதைகளைக் காட்டிலும் உயர்ந்தவர். இதனிடையில் மற்ற

தேவதைகள் அனைத்தும் அடங்கும்". யாதொரு வஸ்து எவனைக்காட்டிலும் உயர்ந்தவனாகக் கருதப்படவில்லையோ; எதைக்காட்டிலும் மிகவும் சிறியதாகவோ, மிகவும் பெரியதாகவோ இல்லையோ, உலகம் முழுவதும் எவனால் வியாபிக்கப்பட்டுள்ளதோ அப்படிப்பட்ட உயர்ந்தானவர் விஷ்ணு.

## विमानार्चन पदनिरुक्तिः - अर्चनफलम् -

तस्मात् परं ब्रह्म परञ्ज्योतिः अक्षरं सर्वभूतात्मकं सर्वाऽऽधारं सनातनं परमपुरुषमर्चयेत् । तद्विमानार्चनकल्पम् । नगर ग्राम अग्रहारयोः निवासिनां न आहिताग्नीनां सामान्यं अग्निहोत्र फलदं आहिताग्नीनां सर्वनिष्कृतिहोमार्थं सर्वसमृध्यर्थं च भवेत् ।।

### விமானார்சன பதநிருக்தி: - அர்சனபலம்

தஸ்மாத் பரம் ப்ரஹ்ம பரஞ்ஜ்யோதி: அக்ஷரம் ஸர்வ பூதாத்மகம் ஸர்வாssதாரம் ஸனாதனம் பரமபுருஷமர்சயேத் . தத்விமானார்சநகல்பம். நகர க்ராம அக்ரஹாரயோ: நிவாஸிநாம் ந ஆஹிதாக்னீனாம் ஸாமான்யம் அக்நிஹோத்ர பலதம், ஆஹிதாக்னீனாம் ஸர்வநிஷ்க்ருதி ஹோமார்த்தம் ஸர்வஸம்ருத்யர்த்தம் ச பவேத்.

### விமானார்ச்சனம் என்ற பதநிருபணம் - ஆராதிப்பதின் பலனும்

ஆகையால் உயர்ந்ததான ஜ்யோதிஸ்வரூபமான, ப்ரம்ம வஸ்துவாக இருக்கின்ற, அழிவற்றதுமான, எல்லா ஜீவன்களிலும் ஆத்மாவாக இருக்கிற, எல்லாவற்றிற்கும் ஆதாரமாக விளங்குகிற, எல்லோரையும் காப்பவராக விளங்குபவருமாகிய பரமபுருஷனை (விஷ்ணுவை) அர்ச்சிக்க வேண்டும். இதுவே விமானார்ச்சனம். இவரை

ஆராதிப்பதால் நகரம், க்ராமம், அக்ரஹாரம் ஆகிய இடங்களில் வஸிக்கின்ற ஆஹிதாக்னியாக இல்லாதவர்களுக்கு சாதாரணமாக அக்னிஹோத்ர பலனும், ஆஹிதாக்னியாக இருப்பவர்களுக்கு வேறு ப்ராயச்சித்தங்கள் இல்லாமல் ஸர்வாபீஷ்டமும் உண்டாகும்.

**तद्विधिपूर्वकं विखनसोक्तस्य विस्तरेण कथन प्रतिज्ञा -**

"तस्मात् अग्नौ नित्यहोमान्ते विष्णोः नित्यार्चनं" गृहे देवायतने वा भक्त्या भगवन्तं नारायणमर्चयेत् इति । ऋषयः वैखासन सूत्रेण तस्यार्चनं समासेनोक्तं तदहं अशेष विशेषेण समन्त्रकं सप्रयोगं क्रमेण विस्तरतो वक्ष्यामि ।

**தத்விதிபூர்வகம் விகனஸோக்தஸ்ய விஸ்தரேண கதன ப்ரதிஜ்ஞா -**

'தஸ்மாத் அக்னௌ நித்யஹோமாந்தே விஷ்ணோ: நித்யார்ச்சனம்' க்ரஹே தேவாயதனே வா பக்த்யா பகவந்தம் நாராயணமர்ச்சயேத் இதி. ரிஷய: வைகாஸந ஸூத்ரேண தஸ்யார்ச்சனம் ஸமாஸேனோக்தம் ததஹம் அசேஷம் விசேஷேண ஸமந்த்ரகம் ஸப்ரயோகம் க்ரமேண விஸ்தரதோ வக்ஷ்யாமி.

**அதன் விதிகளோடு விகனஸரால் சொல்லப்பெற்றவைகளை விபரமாகக் கூறுகிறேன் என்பதாக மரீசியின் ப்ரதிக்ஞை**

ஆகையால் 'அக்னியில் நித்ய ஹோமத்தின் முடிவில் (கடைசியில்) விஷ்ணுவினுடைய நித்ய பூஜையானது' எல்லா தேவதைகளையும் அர்ச்சிப்பதாக ஆகிறது. எனவே வீட்டிலோ, தேவாலயத்திலோ பக்தியோடு பகவான் நாராயணனை (அர்ச்சிக்க) ஆராதிக்கவேண்டும். வைகானஸ

ஸூத்ரத்தில் அந்த ஸ்ரீமந்நாராயணனுடைய (அர்ச்சிக்கும்) பூஜிக்கும்முறை எல்லாவற்றையும் மந்த்ரத்தோடு சேர்த்து செய்யும் முறையையும் விபரமாகக் கூறுகிறேன் என்பதாக மரீசியானவர் கூறுகின்றார்.

### भगवदर्चने श्रुतिः

अस्यार्चने श्रुतिः । "प्रवः पान्तमन्धसो धियायते महे शूराय विष्णवे चार्चते[1]" । धृतोर्ध्व पुण्ड्रः पुरतः नारायणं पूजयतिस्म भक्त्या अर्घ्यादिभिः पुरुषसूक्तमन्त्रैः सम्प्राप्नुयाद्विष्णुपदमवाप्नोति।

### பகவதர்ச்சனே ச்ருதி:

அஸ்யார்சனே ச்ருதி: । 'ப்ரவ: பாந்தமந்தஸோ தியாயதே மஹே சூராய விஷ்ணவே சார்ச்சதே ।" த்ருதோர்த்வ புண்ட்ர: புரத: நாராயணம் பூஜயதிஸ்ம பக்த்யா அர்க்யாதிபி: புருஷ ஸூக்தமந்த்ரை: ஸம்ப்ராப்னுயாத் விஷ்ணுபதமவாப்னோதி .

### பகவானின் பூஜை விஷயமான வேதவாக்யங்கள்

அந்த பூஜை விஷயமான ச்ருதிகள், 'ப்ரவ: பாந்த . . . விஷ்ணவே சார்ச்சதே' ஊர்த்வபுண்ட்ரம் தரித்துக்கொண்டு. முன்சொன்ன மந்த்ரத்தால் நாராயணனைப் பூஜிப்போம். புருஷஸூக்த மந்த்ரத்தால் அர்க்யம் முதலானவைகள் ஸமர்ப்பித்து விஷ்ணுலோகத்தை அடைகிறார்கள்.

### ध्यानाद्भगवतः सकलत्वाऽभिव्यक्ति कथनम्, तदाराधनस्य फलकथनम् -

"पद्मकोशप्रतीकाशम्" विश्वायतने प्रतिमौ हृदये "तस्याः शिखाया मध्ये" परमात्मानमवस्थितं तध्यानेन पश्येत् । आथाकाशगतो वायुर्व्यजनेन सन्निहितो भवति । तथा तत्र अचलं

1. Ref. S. 7004. T. M. S. S. M. L. ऋग्वेदः Page No. 117

मनःकृत्वा तद्भक्त्या तेजोभासुरं भावितं रुक्मवर्णं रक्तास्यं प्रसन्नवदनं प्रवाल दल सन्निभं शुचिस्मित ज्योत्स्नावभासिताधर पल्लवं रक्तनेत्रं सुस्निग्ध तनुं शङ्खचक्रधरं मकुट हार केयूरादि भूषणैः भूषितं सकलं शाश्वतं सर्वभूतेषु अशरीरावस्थितमति शूक्ष्ममनिर्देश्यं सत्य मात्रं अतीन्द्रियं अव्यक्तं प्रकृतेर्मूलं अनादि निदनं अखिल जगत् सृष्टि स्थितिलय कारणं अचिन्त्यं निर्गुणं अप्रमेयं सत्तामात्रमिति ज्ञात्वा ध्यायेत् ।।

**த்யானாத்பகவத: ஸகலத்வாபிவ்யக்தி கதனம், ததாராதனஸ்ய பலகதனம்**

"பத்மகோசப்ரதீகாசம்" விச்வாயதனே ப்ரதிமௌள ஹ்ருதயே "தஸ்யா: சிகாயா மத்யே" பரமாத்மானமவஸ்திதம் த்த்யானேன பச்யேத் அதாகாசகதோ வாயுர்வ்யஜனேன ஸன்னிஹிதோ பவதி. ததா தத்ர அசலம் மன: க்ருத்வா தத்பக்த்யா தேஜோபாஸுரம் பாவிதம் ருக்மவர்ணம் ரக்தாஸ்யம் ப்ரஸன்னவதனம் ப்ரவாள தள ஸன்னிபம் சுசிஸ்மித ஜ்யோத்ஸ்னாவபாஸிதாதர பல்லவம் ரக்தநேத்ரம் ஸுஸ்நிக்த தனும் சங்கசக்ரதரம் மகுட ஹார கேயூராதி பூஷணை: பூஷிதம் ஸகலம் சாச்வதம் ஸர்வபூதேஷு அசரீராவஸ்திதமதிஸூக்ஷ்மமநிர்தேச்யம் ஸத்ய மாத்ரம் அதீந்த்ரியம் அவ்யக்தம் ப்ரக்ருதேர்மூலம் அனாதி நிதனம் அகில ஜகத் ஸ்ருஷ்டி ஸ்திதி லய காரணம் அசிந்த்யம் நிர்குணம் அப்ரமேயம் ஸத்தாமாத்ரமிதி ஞாத்வா த்யாயேத் ।.

**த்யானத்திலிருந்து பகவானின் எல்லா குறிப்புகளும் அந்த ஆராதனத்தின் பலனும்**

'பத்மகோச ப்ரதீகாசம்' எனத்தொடங்கும் மந்த்ரத்தைச் சொல்லி, தாமரை மொக்கானது (மொட்டு) ஹ்ருதயத்தில் தலைகீழாக இருப்பதாகத் தியானித்து. ப்ரணவத்தால் மலரச் செய்து பிறகு 'தஸ்யா: சிகாயா மத்யே" எனத்தொடங்கும்

மந்த்ரத்தைச் சொல்லி அந்த மலர்ந்த தாமரை மலரில் பரமாத்மா இருப்பவராக த்யானிக்கவேண்டும். ஆகாசத்தில் (கலந்துள்ள) பரவியிருக்கிற காற்றை எப்படி விசிறியினால் அருகில் கொண்டுவந்து அறிகிறோமோ; அவ்வாறு சஞ்சலமாக இருக்கிற மனதை ஒருநிலைப்படுத்தி, அந்த பக்தியினாலே தேஜஸ்ஸுடன் ஜ்வலிக்கின்ற தங்க நிறமாயும், தாமரைபோன்ற சிவந்த வாயையுடையவரும், சிரித்த முகத்தை உடையவரும், தளிர்போன்ற மென்மையான சரீரத்தை உடையவரும், நிலவொளிபோன்ற குளிர்ந்த காந்தியை உடையவரும், சிவந்த கண்களை உடையவரும், மேகச்யாமள ரூபமான உடலை உடையவரும், சங்கு-சக்கரம் தரித்தவரும், கீரிடம், ஹாரங்கள், கங்கணங்கள் போன்ற ஆபரணங்கள் தரித்தவரும், நிரந்தரமானவரும், எல்லா பூதங்களிலும் சரீரமற்றதாக இருப்பவரும், சத்தியமானவரும், மிகவும் ஸூக்ஷ்மமானவரும், கண்களுக்குப் புலப்படாதவரும், பிரித்துக் காணமுடியாதவரும் (பிரிக்கமுடியாதவரும்) இந்த ப்ரக்ருதிக்கு மூலகாரணமானவரும், ஆரம்பமில்லாதவராய் இருப்பவரும், எல்லா உலகத்திற்கும் ஆக்கல், காத்தல், அழித்தல் ஆகியவற்றிற்குக் காரணமாக இருப்பவரும், மனதால் சிந்திப்பதற்கு விஷயமாகாதவரும், நிர்குணமானவரும் (கெட்ட குணங்கள் இல்லாதவரும்), ஸத்ஸ்வரூபமாக இருப்பவருமாக ஸ்ரீமந்நாராயணனை நினைத்து த்யானிக்கவேண்டும்.

## आचार्यादि वरणम् -

श्रीवैखानससूत्रोक्त प्रकारेण निषेकादि संस्कारैः संस्कृतं आचार्य अर्चक परिचारकानां स्थापकानां ऋत्विजश्च वरयेत् ।

### ஆசார்யாதி வரணம் -

ஸ்ரீவைகானஸஸூத்ரோக்த ப்ரகாரேண நிஷேகாதி ஸம்ஸ்காரை: ஸம்ஸ்க்ருதம் ஆசார்ய அர்ச்சக பரிசாரகானாம் ஸ்தாபகானாம் ரித்விஜச்ச வரயேத்.

### அர்ச்சகர் - பரிசாரகர் ஆகியோரை வரித்தல்

ஸ்ரீவைகானஸ ஸூத்ரத்தில் சொல்லப்பெற்றுள்ளபடி நிஷேகம் முதலான ஸம்ஸ்காரங்களைப் பெற்றவர்களை ஆசானாகவும், அர்ச்சகராகவும், பரிசாரகராகவும், நிர்வாஹகராகவும், ரித்விக்காகவும் நியமிக்கவேண்டும்.

## आराधनस्य भेदः प्रतिमार्चनस्य सहेतुकं श्रैष्टयम् -

तदाराधनं द्विविधं अमूर्तं समूर्तं चेति । अग्नौ हुतममूर्तं प्रतिमाराधनं समूर्तम् । तत् श्रेष्ठं ध्यानारोह भावेऽपि अविश्चिन्तस्तिष्ठति ।

### ஆராதனஸ்ய பேத: ப்ரதிமார்சனஸ்ய ஸஹேதுகம் ச்ரைஷ்ட்யம் -

ததாராதனம் த்விவிதம் அமூர்த்தம் ஸமூர்த்தம் சேதி । அக்னௌ ஹுதமமூர்த்தம் ப்ரதிமாராதனம் ஸமூர்த்தம்। தத் ச்ரேஷ்டம் த்யானாரோஹ பாவேऽபி அவிச்சிந்தஸ்திஷ்டதி ।

### பூஜையின் விதங்களும், மூர்த்தியோடு சேர்ந்த பூஜையின் உயர்வும்

பூஜை முறையானது இருவகைப்படும். மூர்த்தியோடு சேர்ந்தமைந்த பூஜை. மற்றொன்று மூர்த்தியில்லாத (மானஸிக) பூஜை. அக்னியில் ஹோமம் செய்வது அமூர்த்தம் எனப்படும். இதில் மூர்த்தியோடு சேர்ந்த பூஜையே சிறந்ததாகக் கருதப்படு கிறது. இம்முறையில் த்யானம், ஆவாஹனம் போன்றவை மனதை ஒருமுகப்படுத்திச் செய்யவேண்டியுள்ளது முக்கியமான ஒன்றாகும்.

विमानार्चनस्य फलजनकत्वम्

तद्विमानार्चनं सर्वक्रतु फलप्रदम् । सर्व कामप्रदं चेति ब्रह्माचाशंसत् । तस्मात् क्रमेण विस्तरतो वक्ष्यामि । तदवहित मनसः शृणुध्वमित्याह मरीचिः ।

।। इति श्रीवैखानसे मरीचि प्रोक्ते विमानार्चन कल्पे
(अयुत ग्रन्थ संहितायां) ऋषि प्रश्नोत्तरं नाम प्रथमः पटलः ।।

**விமானார்ச்சனஸ்ய பலஜனகத்வம்**

தத்விமானார்ச்சனம் ஸர்வக்ரது பலப்ரதம். ஸர்வ காமப்ரதம் சேதி ப்ரம்மாசாசம்ஸத். தஸ்மாத் க்ரமேண விஸ்தரதோ வக்ஷ்யாமி. ததவஹித மநஸ: ச்ருணுத்வமித்யாஹ மரீசி:.

இதி ஸ்ரீவைகானஸே மரீசி ப்ரோக்தே விமானார்ச்சன கல்பே
(அயுத க்ரந்த ஸம்ஹிதாயாம்) ரிஷி ப்ரச்னோத்தரம் நாம
ப்ரதம: படல:!!

**விமானார்ச்சனையின் பலன்**

விமானார்ச்சனம் எல்லா யாக பலன்களையும் அளிக்கக் கூடியது. விரும்பிய அனைத்தையும் கொடுக்கக்கூடியது. எனவே விளக்கமாகக் கூறுகிறேன் என்பதாக மரீசி கூறுகிறார்.

இவ்வாறு ஸ்ரீவைகானஸத்தில் மரீசியால் சொல்லப்பட்ட
விமானார்ச்சன கல்பத்தில் ரிஷிகளின் கேள்வி - பதில்
என்பதாக முதல் படலம் முற்றும்.

## ।। अथ द्वितीयः पटलः ।।

### विशिष्टाऽऽचार्य वरणम्

अथ आलय भूपरीक्षादि समारम्भकालात् पूर्वस्मिन् यजमानः आचार्यं सर्वकार्योपदेशकं वैखानस सूत्रोक्तविधिना निषेकादि संस्कारैस्संस्कृतं विप्रं वेदविदं नित्य स्वाध्याययुतं गृहस्थं पत्न्यपत्ययुतं दयादि गुणैर्युक्तं, शुभलक्षणैर्युक्तं भूपरीक्षादि क्रियामार्गज्ञं ज्ञानयोगविदं जितेन्द्रियं नित्यध्यानपरं निश्चलं नित्यार्चनपरं वैष्णवं भक्तिमन्तमेकं वरयित्वाऽभिवन्द्य सम्पूज्य याचयेत् ।

## ।। அத த்விதீய: படல: ।।

### விசிஷ்டா஽஽சார்ய வரணம்

அத ஆலய பூபரீக்ஷாதி ஸமாரம்பகாலாத் பூர்வஸ்மின் யஜமான: ஆசார்யம் ஸர்வகார்யோபதேசகம் வைகானஸ ஸூத்ரோக்தவிதினா நிஷேகாதி ஸம்ஸ்காரைஸ்ஸம்ஸ்க்ருதம் விப்ரம் வேதவிதம் நித்ய ஸ்வாத்யாயயுதம் க்ருஹஸ்தம் பத்ந்யபத்யயுதம் தயாதி குணைர்யுக்தம், சுபலக்ஷணைர்யுக்தம் பூபரீக்ஷாதி க்ரியாமார்க்கஞும் ஞானயோகவிதம் ஜிதேந்த்ரியம் நித்யத்யானபரம் நிச்சலம் நித்யார்சனபரம் வைஷ்ணவம் பக்திமந்தமேகம் வரயித்வா஽பிவந்த்ய ஸம்பூஜ்ய யாசயேத்.

## இரண்டாவது படலம்

### அனைத்தும் அறிந்த ஆசார்யனை நியமித்தல்

ஆலயத்திற்கு 'பூ' பரீக்ஷை (இடம் தேர்ந்தெடுத்தல்) செய்யத் தொடங்கும் முன்பு யஜமானன், அனைத்து காரியங்களையும் உபதேசம் மூலம் பெறப்பெற்றவரும்,

ஸ்ரீவைகானஸ ஸூத்ரத்தில் சொல்லப்பட்ட விதிப்படி நிஷேகம் முதலான ஸம்ஸ்காரங்கள் செய்யப்பெற்றவரும், ப்ராம்மணனும், வேதமறிந்தவரும், தினமும் தனது வேதத்தைச் சொல்பவரும், பத்னியுடன் கூடிய க்ருஹஸ்தராயும், குழந்தைகளுடன் கூடியவராயும், கருணையுள்ளம் கொண்டவரும், நல்ல லக்ஷணங்களுள்ளவரும், பூ பரீக்ஷை செய்யும் விதத்தை (வழியை) அறிந்தவரும், ஞானயோகத்தை அறிந்தவரும், இந்த்ரியத்தை ஜெயித்தவரும் (புலனடக்கம் உள்ளவரும்), தினமும் தியானம் செய்பவரும், மனதை ஒருமுகப்படுத்திய வருமான ஒரு வைஷ்ணவரை (வரித்து) இதன் பொருட்டு ஆசார்யனாக நியமித்து, வணங்கி; பூஜித்து "பூ" பரீக்ஷைக்கு ஆசார்யனாக இருக்கும்படி (கேட்டுக்கொள்ள) ப்ரார்த்தித்துக் கொள்ளவேண்டும்.

## भूपरीक्षाविधिः, तत्कालश्च

आचार्यो यजमानेन भूमिं सम्यक् परीक्षयेत् । यथेष्ट मासे शुक्लपक्षे कृष्णपक्षे त्रिधाद्यके वा, कर्तुरनुकूलर्क्षेभूपरीक्षां कारयेत् ।

### "பூ" பரீக்ஷா விதி:, தத்காலச்ச

ஆசார்யோ யஜமானேன பூமிம் ஸம்யக் பரீக்ஷயேத். யதேஷ்ட மாஸே சுக்லபக்ஷே க்ருஷ்ணபக்ஷே த்ரிதாத்யகே வா, கர்த்துரனுகூலர்க்ஷே "பூ" பரீக்ஷாம் காரயேத்.

### பூ பரீக்ஷையின் விதியும், அதன் காலமும்

ஆசார்யன் யஜமானனுடன் பூமியை நன்கு பரீக்ஷிக்க வேண்டும். (உகந்த) ஏதாவது ஒரு மாதத்தில் சுக்லபக்ஷத்திலோ, க்ருஷ்ணபக்ஷ முதல் மூன்று நாட்களிலோ, விஷ்ணுவுக்கு உகந்த தினத்திலோ, யஜமானனுக்கு அனுகூலமான தினத்தில் "பூ" பரீக்ஷையைச் செய்யவேண்டும்.

## अङ्कुरार्पण पूर्वं निमित्त दर्शनविधिः

तद्दिनात्पूर्वे अङ्कुरानर्पयित्वा हर्म्योऽऽगारादि शिल्पिशास्त्रज्ञं लक्षण संपन्नं, शुद्धमरोगिणं कुशलं शिल्पिनं आहूय, वैष्णवैस्सार्धं "प्रीयतां भगवा"निति देवेशं प्रणम्य देवं ध्यायन् "विष्णुर्मां रक्षतु" इत्यात्मरक्षां कृत्वा सर्वालङ्कार संयुक्तां दीपाम्बुजकरकां कन्यां पुरस्कृत्य, देशं प्रविश्य प्रदक्षिणं कृत्वा, शकुनान्युपलक्षयेत् ।

## அங்குரார்ப்பண பூர்வம் நிமித்த தர்சன விதி:

தத்தினாத்பூர்வே அங்குரானர்பயித்வா ஹர்ம்யா஽஽காராதி சில்பிசாஸ்த்ரக்ஞம் லக்ஷண ஸம்பன்னம், சுத்தமரோகினம் குசலம் சில்பினம் ஆஹூய, வைஷ்ணவைஸ்ஸார்த்தம் 'ப்ரீயதாம் பகவா'னிதி தேவேசம் ப்ரணம்ய தேவம் த்யாயன் 'விஷ்ணுர்மாம் ரக்ஷது' இத்யாத்மரக்ஷாம் க்ருத்வா ஸர்வாலங்கார ஸம்யுக்தாம் தீபாம்புஜகரகாம் கன்யாம் புரஸ்க்ருத்ய, தேசம் ப்ரவிச்ய ப்ரதக்ஷிணம் க்ருத்வா, சகுனான்யுபலக்ஷயேத்.

## அங்குரார்பணம் செய்தல், சகுனம் பார்த்தல் ஆகியவற்றின் முறை

அதற்கு ('பூ' பரீக்ஷை செய்வதற்கு) முன்தினம் அங்குரார்பணம்செய்து, பெருமாளின் உருவ அளவு முதலான சில்ப சாஸ்த்ரம் அறிந்தவருக்கான லக்ஷணங்களோடு கூடியவரும், சுத்தமானவரும், வ்யாதி இல்லாதவரும், சௌக்யமாக இருப்பவருமான சில்பியை அழைத்து, வைணவர்களுடன்கூட 'ப்ரீயதாம் பகவான்' எனத்தொடங்கும் ப்ரார்த்தனா ஸூக்தத்தைச் சொல்லி பகவானை வணங்கித் த்யானித்து 'விஷ்ணுர் மாம் ரக்ஷது' என்ற மந்த்ரத்தைச் சொல்லி, ஆத்ம ரக்ஷணம் செய்துகொண்டு, நன்கு

அலங்கரிக்கப்பட்டவளும், தீபம், தாமரை மலருடன் கூடிய குடத்தைத் தாங்கியிருப்பவளுமாகிய கன்னிகையுடன்கூட "பூ" பரீக்ஷை செய்யும் இடத்திற்குச் சென்று, வலம் வந்து (பின்பு) சகுனத்தைப் பார்க்கவேண்டும்.

## भू परीक्षा पूर्व मृत्सङ्ग्रहः

चतुरश्रामायताश्रां वा, प्रागानतामुत्तरानतां समां वा भूमिं, शब्द, स्पर्श, रूप, रस, गन्धैस्सम्परीक्षयेत् । वीणा, वेणु, दुन्दुभि गज, तुरङ्ग, वेदाब्धिध्वनियुतां, सुख स्पर्शां, श्वेत, पीत, रक्त, कृष्ण वर्णाभां, मधुराम्लतिक्त कटु कषाय, लवण, रसां सुगन्ध सम्युक्तां, प्रदक्षिणोदवतीं क्षीर वृक्ष तुलसी कुश दर्भ विश्वामित्र, विष्णुक्रान्त, स्थलारविन्द दूर्वायुतां भूमिं सुमुहूर्ते गृहीत्वा, आचार्यः प्राङ्मुखोदङ्मुखो वा नीत्वा यस्मिन् देशे "जीवन्त" इति जलं प्रक्षिप्य, मेदिन्यादिना हस्ताभ्यां भूमिमभिमृशेत् "इदं विष्णु" रित्याहरेत् ।

### "பூ" பரீக்ஷா பூர்வம் ம்ருத்ஸங்க்ரஹ:

சதுரச்ராமாயதாச்ராம் வா, ப்ராகானதாமுத்தரானதாம் ஸமாம் வா பூமிம், சப்த, ஸ்பர்ச, ரூப, ரஸ, கந்தைஸ்ஸம்பரீக்ஷயேத். வீணா, வேணு, துந்துபி கஜ, துரங்க, வேதாப்தித்வனியுதாம், ஸுக ஸ்பர்சாம், ச்வேத, பீத, ரக்த, க்ருஷ்ண வர்ணாபாம், மதுராம்லதிக்த கடு கஷாய, லவண, ரஸாம் ஸுகந்த ஸம்யுக்தாம், ப்ரதக்ஷிணோதவதீம் க்ஷீர வ்ருக்ஷ துளஸீ குச தர்ப விச்வாமித்ர, விஷ்ணுக்ராந்த, ஸ்தலாரவிந்த தூர்வாயுதாம் பூமிம் ஸுமுஹூர்த்தே க்ருஹீத்வா, ஆசார்ய: ப்ராங்முகோதங்முகோ வா நீத்வா யஸ்மிந் தேசே 'ஜீவந்த' இதி ஜலம் ப்ரக்ஷிப்ய, மேதிந்யாதினா ஹஸ்தாப்யாம் பூமிமபிம்ருசேத் 'இதம் விஷ்ணு' ரித்யாஹரேத்.

## பூ பரீக்ஷை செய்து ம்ருத்ஸங்க்ரஹணம் செய்தல்

சதுரமாகவோ, நீண்டதாகவோ, கிழக்கிலோ. வடக்கிலோ சமமானதாகவோ பூமியை செய்து சப்தம், ஸ்பர்சம், ரூபம், ரஸம், கந்தம் ஆகியவை உள்ளனவா? என நன்கு பரீக்ஷிக்க வேண்டும். நல்ல ஸ்பர்சம் உள்ளவளும், வெளுப்பு, மஞ்சள், சிவப்பு, கருப்பு முதலிய வர்ணங்களுடன் கூடியவளும், இனிப்பு, புளிப்பு, கார்ப்பு, கைப்பு, துவர்ப்பு, உவர்ப்பு ஆகிய ருசி உடையவளும், நல்ல மணமுடன் கூடியவளும், சுற்றிக்கொண்டே இருப்பவளும், பால் மரங்கள், துளசி, குசம், தர்பம், விச்வாமித்ரம், விஷ்ணுக்ராந்தம், ரோஜா புஷ்பம், தூர்வா ஆகியவற்றுடன் சேர்ந்திருப்பவளுமான பூமியைத் தியானித்து நல்ல முகூர்த்தத்தில் க்ரஹித்து (எடுத்து)க் கொண்டு ஆசார்யன் கிழக்கு முகமாகவோ, வடக்கு முகமாகவோ சென்று குறிப்பிட்டுள்ள இடத்தில் 'ஜீவந்த' எனத் தொடங்கும் மந்த்ரத்தைச் சொல்லி ஜலத்தை விடவேண்டும். மேதினியை (பூமாதேவி போன்ற பொம்மையை (ஆகாரத்தை-உருவத்தை)ச் செய்து) கைகளினால் தொடவேண்டும். பிறகு "இதம் விஷ்ணு:" என்ற மந்த்ரத்தைச் சொல்லி ஸ்வீகரிக்க (எடுக்க) வேண்டும்.

## त्याज्यभूमि कथन पूर्व निमित्तदर्शन प्रकारः

नपुंसक वृक्षाऽऽढ्य मूष, कपालास्थि, पाषाण शर्कराऽऽकीर्ण, वल्मीक पतङ्ग, कूप, भस्माङ्गार, तुष केशान्वितां अन्त्यजाति भूयिष्टां भूमिं त्यजेत् । पूर्वोक्ते देशे हस्तायत विस्तारावगाढं खनित्वा, तदवटे तां मृदं प्रक्षिपेत् । अधिके महतीं वृद्धिं, हीने हानिं, समे समं विद्यात् ।

## த்யாஜ்யபூமி கதன பூர்வம் நிமித்ததர்சன ப்ரகார:

நபும்ஸக வ்ருக்ஷாஸ்ஸட்ய மூஷ. கபாலாஸ்தி, பாஷாண சர்க்கராஸ்ஸகீர்ணம், வல்மீக பதங்க, கூப, பஸ்மாங்கார, துஷ

கேசான்விதாம் அந்த்யஜாதி பூயிஷ்டாம் பூமிம் த்யஜேத். பூர்வோக்தே தேசே ஹஸ்தாயத விஸ்தாராவகாடம் கனித்வா, ததவடே தாம் ம்ருதம் ப்ரக்ஷிபேத். அதிகே மஹதீம் வ்ருத்திம், ஹீனே ஹானிம், ஸமே ஸமம் வித்யாத்.

**மண் எடுத்துக்கொள்ளத்தகாத இடங்களும், சகுனம் பார்க்கும் முறையும்**

நபும்ஸக மரங்களுள்ள இடம், எலி, மண்டையோடு, எலும்பு, கற்கள், பெருமணல், கரையான் புற்றுள்ள இடம், கிணறு உள்ள இடம், முடி நிறைந்ததும், கீழ்க்குடிமக்கள் வசிக்கும் இடம் போன்ற மேற்சொன்ன இடங்கள் அனைத்திலிருந்தும் மண்ணானது ஸ்வீகரிக்கத் தகாதது. முன்பு சொல்லப்பட்ட உகந்த இடத்தில் கையளவு பள்ளம் தோண்டி, அதில் அந்த மண்ணை இடவேண்டும். அதிகமானால் வ்ருத்தி, குறைந்தால் கெடுதல், ஸமமாக இருப்பின் சமம் என்பதாகக் கொள்ளவேண்டும்.

## निमित्तान्तर दर्शन पूर्व कार्यारम्भविधिः

अथान्यैर्निमित्तैस्संलक्ष्यकार्यमारभेत् ।

**நிமித்தாந்தர தர்சன பூர்வம் கார்யாரம்ப விதி:**

அதாந்யைர்நிமித்தைஸ்ஸம்லக்ஷ்ய கார்யமாரபேத்।

**மற்ற சகுனங்களையும் பார்த்து பணியைத் தொடங்குவது**

மற்ற சகுனங்களையும் அறிந்து காரியத்தைத் தொடங்க வேண்டும்.

## ग्रामादौ चतुःषष्ट्यादि भागकरणपूर्वं विष्ण्वर्चनविधिः

ग्रामादिष्वेवं विधाय चतुःषष्टिमेकाशीतिपदं षट्पञ्चाशदुत्तर द्विशत पदं वा कृत्वा, तन्मध्यं ब्रह्मभागं चतुर्धा कृत्वा, तद्वायव्यांशे पश्चिमे पूर्वे वा मध्य सूत्रादुत्तरे दक्षिणे वा, तत्सूत्रं देवस्य दक्षिण

पादपार्श्वे प्रासादप्राकाराणां भित्तिं वा समाश्रितं एवं सङ्कल्प्य, देवेशं विष्णुं नव षट्पञ्चमूर्ति विधानेन प्रतिष्टाप्य अर्चयेत् ।

**க்ராமாதெள சது:ஷஷ்ட்யாதி பாககரணபூர்வம் விஷ்ண்வர்சநவிதி:**

க்ராமாதிஷ்வேவம் விதாய சது:ஷஷ்டிமேகாசீதிபதம் ஷட்பஞ்சாசதுத்தரத்விசத பதம் வா க்ருத்வா, தன்மத்யம் ப்ரம்மபாகம் சதுர்தா க்ருத்வா, தத்வாயவ்யாம்சே பச்சிமே பூர்வே வா மத்ய ஸூத்ராதுத்தரே தக்ஷிணே வா, தத்ஸூத்ரம் தேவஸ்ய தக்ஷிண பாதபார்ச்வம் ப்ராஸாத ப்ராகாராணாம் பித்திம் வா ஸமாச்ரிதம் ஏவம் ஸங்கல்ப்ய, தேவேசம் விஷ்ணும் நவ ஷட்பஞ்சமூர்த்தி விதானேன ப்ரதிஷ்டாப்ய அர்ச்சயேத்.

**க்ராமங்களின் பரப்பளவை அறுபத்து நான்கு பதக்ரமங்களாகச் செய்து அவற்றில் பெருமாளை ப்ரதிஷ்டை செய்து அர்ச்சிக்கும் முறை**

க்ராமங்களில் உள்ள பரப்பளவைக் கீழ்க்கண்டவாறு அறுபத்து நான்கு பாகமாகவோ, எண்பத்தோரு பாகமாகவோ, இருநுற்று ஐம்பத்தாறு பாகமாகவோ செய்து அதன் மத்தியில் ப்ரம்ம பாகத்தை நான்காகச் செய்து, அதன் வாயு பாகத்தில் மேற்கிலோ, கிழக்கிலோ அல்லது மத்யத்திற்கு வடக்கிலோ, தெற்கிலோ, மத்யபாகம் பெருமாளுக்குத் தெற்குப் பகுதிக்கு அருகிலோ அல்லது நீண்ட (ப்ராகார) சுற்று மதில் சுவர் உள்ளதாக அமைந்ததாகவோ, கோயில் அமைத்துப் பெருமாளை விஷ்ணும், புருஷம், சத்யம், அச்யுதம், அநிருத்தம் என்பதாக பஞ்சமூர்த்தி விதானமாகவோ, ஆறு மூர்த்திகளை எழுந்தருளச் செய்து, ஆராதிக்கும் முறையான ஷண்மூர்த்தி விதானமாகவோ; விஷ்ணு, புருஷ, ஸத்ய, அச்யுத, அநிருத்த, கபில, யக்ஞ, நாராயண, புண்யன் என்பதான ஒன்பது மூர்த்திகளை எழுந்தருளச் செய்து ஆராதிக்கும் முறையான நவமூர்த்தி விதானமாகவோ ப்ரதிஷ்டை செய்து அர்ச்சிக்கவேண்டும்.

## ऐशान्यादिषु शङ्करादि भवनम्

ऐशान्यां शङ्करभवनं प्राङ्मुखं, वारुणे देवेशं प्राङ्मुखमासीनं स्थितं वा आदित्यांशे भास्करालयं प्रत्यङ्मुखं, याम्ये विन्ध्यवासिनीं प्राङ्मुखीं, भूतेशे विघ्नेशं, सुग्रीवे षण्मुखं, अदितौ मातृकोष्टं पराङ्मुखं, जयन्ते दौवारिके वा कृष्णस्यालयं, पुष्पदन्ते शोषणे वा राघवस्यालयं, महेन्द्रे महामत्स्यं, सत्यके कूर्मस्याऽऽलयं, नैऋते वाराहं, जवने वा अन्तरिक्षे वा नारसिंहं, नागे वामनं त्रिविक्रमं च, गन्धर्वे बलभद्रं, मुख्ये परशुपाणिं सूरिदेवे कल्किनं, सोमे शयानं, गृहक्षते दैविकं वासुदेवं, वितथे मानुषं वासुदेवं, उष्णशालादिमूर्ति भृङ्गराजे ग्रामाद्बाह्ये वा पञ्चवीराणां स्थानम् ।

## ஐசான்யாதிஷு சங்கராதி பவனம்

ஐசான்யாம் சங்கரபவனம் ப்ராங்முகம், வாருணே தேவேசம் ப்ராங்முகமாஸீநம் ஸ்திதம் வா ஆதித்யாம்சே பாஸ்கராலயம் ப்ரத்யங்முகம், யாம்யே விந்த்யவாஸினீம் ப்ராங்முகீம், பூதேசே விக்னேசம், ஸுக்ரீவே ஷண்முகம், அதிதௌ மாத்ருகோஷ்டம் பராங்முகம், ஜயந்தே தௌவாரிகே வா க்ருஷ்ணஸ்யாலயம், புஷ்பதந்தே சோஷணே வா ராகவஸ்யாலயம், மஹேந்த்ரே மஹாமத்ஸ்யம், ஸத்யகே கூர்மஸ்யாஸ்ஸலயம், நைர்ருதே வாராஹம், ஜவனே வா அந்தரிக்ஷே வா நாரஸிம்ஹம், நாகே வாமனம் த்ரிவிக்ரமம் ச, கந்தர்வே பலபத்ரம், முக்யே பரசுபாணிம் ஸூரிதேவே கல்கினம், ஸோமே சயானம், க்ருஹக்ஷதே தைவிகம் வாஸுதேவம், விததே மாநுஷம் வாஸுதேவம், உஷ்ண- சாலாதிமூர்த்தி ப்ருங்கராஜே க்ராமாத் பாஹ்யே வா பஞ்சவீரானாம் ஸ்தானம்.

## ஈசானாதி திசைகளில் சங்கரன் முதாலன தெய்வங்களின் ஆலய நிர்மாணம்

ஊரின் வடக்கில் ஈசான கோஷ்டத்தில் சிவன் கோயிலையும், வருண பதத்தில்[1] கிழக்கு முகமாக நின்றவாறோ, அமர்ந்தவாறோ, தேவேசனுக்கு (விஷ்ணுவுக்கு) கோயிலையும், மஹேந்திர பதத்திற்கு வடக்கில் அமைந்துள்ள ஆதித்யபதத்தில்[2] பாஸ்கரனுக்கு(சூரியனுக்கு) கோயிலையும், யமபதத்தில்[3] துர்கையின் கோயிலையும், பூதேச பதத்தில்[4] (விக்னேசரையும்) விநாயகருடைய கோயிலையும், ஸுக்ரீவ பதத்தில்[5] முருகனின் கோயிலையும், அதிதி பதத்தில்[6] (ஸப்த) மாத்ருக்களின் கோயிலையும், ஜயந்த பதத்திலோ[7] தௌவாரிக பதத்திலோ க்ருஷ்ணனின் கோயிலையும், புஷ்பதந்த பதத்திலோ[8], சோஷணபதத்திலோ (ராமனுடைய) ராகவனுடைய கோயிலையும், மாஹேந்த்ரபதத்தில்[9] மத்ஸ்யாவதாரமுள்ள கோயிலையும், ஸத்யகபதத்தில்[10] கூர்மாவதாரமூர்த்தியின் கோயிலையும், நிர்ருதிபதத்தில்[11] வராஹமூர்த்தியின் கோயிலையும், ஜவனபதத்திலோ அல்லது அந்தரிக்ஷ பதத்திலோ[12] நரஸிம்மமூர்த்தியின் கோயிலையும், நாகபதத்தில்[13] வாமன மற்றும் த்ரிவிக்ரமமூர்த்தியின் கோயிலையும், கந்தர்வ பதத்தில் பலபத்ர (பலராம) மூர்த்தியின் கோயிலையும், முக்ய பதத்தில்[15] பரசுராமனுடைய கோயிலையும், ஸௌரிதேவ பதத்தில்[16] கல்கியினுடைய கோயிலையும், ஸோம பதத்தில்[17] சயனமூர்த்தியின் கோயிலையும், க்ருஹாக்ஷத பதத்தில்[18] தைவிக வாஸுதேவன் கோயிலையும், விதத பதத்தில்[19] மாநுஷ வாஸுதேவனையும், ப்ருங்கராஜ பதத்தில்[20] உஷ்ண-சாலாமூர்த்தியின் கோயிலையும், மேற்படி (ப்ருங்கராஜ) பதத்திலேயோ க்ராமத்திற்கு வெளியிலோ பஞ்சபாண்டவர் களின் கோயிலையும் அமைக்கவேண்டும்.

---

1. ஊர் எல்லையின் மேற்கில் மத்யப்பகுதி ஸரித்பதிக்கு உரிய கோஷ்டம். அதற்கு அக்னி திக்கில் உள்ளது வருண பதமாகும். (பதம்-கோஷ்டம் இரண்டும் பொருள் ஒன்றாகக் கொள்ளவேண்டும்.

2. ஊர் எல்லையின் கிழக்கின் மத்யப்பகுதி மஹேந்திர கோஷ்டம். அதற்கு வடக்குப் பகுதியில் அமைந்துள்ளது ஆதித்ய பதமாகும்.

## ग्रामादौ तत्प्रेक्षमूर्ति स्थापनविधिः

ग्राम मध्ये बाह्ये दिक्षु विदिक्षु वा सर्वत्र स्थितमासीनं, शयानं, यानकं वा, ध्रुव कौतुकं ध्रुवार्चां वा ग्रामप्रेक्षमेव कारयेत् ।

## க்ராமாதெள தத்ப்ரேக்ஷமூர்த்தி ஸ்தாபனவிதி:

க்ராம மத்யே பாஹ்யே திக்ஷு விதிக்ஷு வா ஸர்வத்ர ஸ்திதமாஸீனம், சயானம், யானகம் வா, த்ருவ கௌதுகம் த்ருவார்ச்சாம் வா க்ராமப்ரேக்ஷமேவ காரயேத்.

---

3. ஊர் எல்லையின் தெற்கின் மத்யபாகம் யமபதமாகும்.
4. யம பதத்தின் வாயு பாகம் பூதேச (ப்ரேதேச) பதமாகும்.
5. ஊர் எல்லையின் மேற்குப் பகுதியின் மத்யபாகம் ஸரித்பதி பதம். அதன் தெற்கில் அமைந்துள்ள புஷ்பதந்த பவனத்திற்கு அடுத்தாற்போல் (தெற்குப்புறத்தில்) அமைந்துள்ளது ஸுக்ரீவபதமாகும்.
6. ஊர் எல்லையின் வடக்கின் மத்தியில் அமைந்துள்ளது ஸோமபதம். அதன் கிழக்கில் அமைந்துள்ள அர்கள பதத்தினையும் அடுத்து (கிழக்கிலேயே) அமைந்துள்ளது ஆதித்யபதமாகும்.
7. ஜயந்தபதம் என்பது மஹேந்திர பதத்திற்கு வடக்கிலுள்ளது ஆதித்யபதம். அதனை அடுத்து வடக்கில் அமைந்துள்ளது ஜயந்தபதமாகும். ஊர் எல்லையின் தென்மேற்கிலுள்ள நிர்ருதி பதத்தின் மேற்கிலமைந்துள்ளது தௌவாரிக பதமாகும்.
8. ஸரித்பதி பதத்திற்கு (வடக்குப் பகுதியில்) அடுத்தாற்போல் உள்ளது புஷ்பதந்தபதம். ஸரித்பதி பதத்திற்குத் தெற்கில் உள்ளது அசுரபதம். அதனை அடுத்து (தெற்கில்) அமைந்துள்ளது சோஷணபதமாகும்.
9. ஊர் எல்லையின் கிழக்கு எல்லையின் மத்யபாகம் மஹேந்திரபதம் ஆகும்.
10. மஹேந்திர பதத்திற்கு (தெற்கில்) அடுத்தாற்போல் உள்ளது ஸத்யபதமாகும்.
11. ஊர் எல்லையின் தென்மேற்கு பாகம் நிர்ருதி பதமாகும்.
12. ஜவனபதம் என்பது ஊர் எல்லையின் வடமேற்குப் பாகமாகும். அந்தரிக்ஷபதம் என்பது தென்கிழக்கில் அமைந்த அக்னிபதத்தின் அடுத்தாற்போல் (வடக்கில்) அமைந்துள்ளது.

## க்ராமங்களில் க்ராமத்தைப் பார்த்துக்கொண்டிருக்குமாறு தேவதைகளை ஸ்தாபிக்கும் விதி

க்ராம மத்தியிலோ, வெளியிலோ, எட்டு திக்குகளில் ஏதாவது ஓரிடத்திலோ அல்லது எட்டு திக்குகளிலேயுமோ நின்ற, இருந்த, கிடந்தவாறு வாஹனத்தில் அமர்ந்தவாறோ, த்ருவ, கௌதுக பேரமாகவோ அல்லது த்ருவ, அர்ச்சாபேரமாகவோ க்ராமத்தைப் பார்த்திருக்குமாறு (விஷ்ணுவை) ஸ்தாபிக்கவேண்டும்.

## ग्रामाद्बाह्ये विप्राऽऽवासस्थले नदीतीरादौ वा

ग्रामाद्बाह्येऽपि यत्र विप्रैर्वस्तव्यं तत्रैव मध्ये दिशासु विदिशासु च देवं, देवीभ्यां सहितं वा संस्थापयेत् । वन नद्यद्रि समुद्र पार्श्वे अन्यत्र तटाकाऽऽराम समीपे विविक्त देशे वा ।

---

13. ஊர் எல்லையின் வடமேற்கிலுள்ள ஜவனபதத்தின் அடுத்தாற்போல் வடக்கில் அமைந்துள்ளது நாகபதமாகும்.

14. ஊர் எல்லையின் தென்திசையின் மத்யபாகம் யமபதம். அதற்கு மேற்குப் பகுதியில் (யமபதத்தை அடுத்து) அமைந்துள்ளது கந்தர்வபதமாகும்.

15. நாகபதத்திற்கு அடுத்தாற்போல் வடக்கில் அமைந்துள்ளது முக்யபதம்.

16. ஊர் எல்லையின் வடகிழக்கிலுள்ள ஈசான பதத்தின் அடுத்தாற்போல் வடக்கில் உள்ளது ஸ்ரிதேவபதமாகும்.

17. ஊர் எல்லையின் வடக்கின் மத்யப்பகுதி ஸோமபதமாகும்.

18. ஊர் எல்லையின் தெற்கின் மத்யப்பகுதி யமபதம். அதனை அடுத்து கிழக்கிலுள்ளது க்ருஹாக்ஷத பதமாகும்.

19. க்ருஹாக்ஷத பதத்திற்கு அடுத்தாற்போல் (கிழக்கில்) அமைந்துள்ளது விததபதமாகும்.

20 ஊர் எல்லையின் தென்திசையின் மத்யபகுதி யமபதமாகும். அதனை அடுத்தாற்போல் (மேற்கில்) அமைந்துள்ளது கந்தர்வபதமாகும். அதனையும் அடுத்து (மேற்கில்) அமைந்துள்ளது ப்ருங்கராஜ பதமாகும்.

க்ராமாத்பாஹ்யே விப்ரா஽஽வாஸஸ்தலே நதீதீராதௌ வா

க்ராமாத்பாஹ்யேऽபி யத்ர விப்ரைர்வஸ்தவ்யம் தத்ரைவ மத்யே திசாஸு விதிசாஸு ச தேவம், தேவீப்யாம் ஸஹிதம் வா ஸம்ஸ்தாபயேத். வன நத்யத்ரி ஸமுத்ர பார்ச்வே அன்யத்ர தடாகா஽஽ராம ஸமீபே விவிக்த தேசே வா.

**க்ராமத்திற்கு வெளியிலோ, ப்ராம்மணர்கள் வசிக்கின்ற இடத்திலோ, நதிக்கரையிலோ (ப்ரதிஷ்டை செய்யவேண்டும்)**

கிராமத்திற்கு வெளியிலோ, எங்கு ப்ராம்மணர்கள் வசிக்கின்றார்களோ அங்கு நடுவில் அல்லது எட்டு திக்குகளிலுமோ பெருமாளை மட்டுமோ, தேவிகளுடனோ ஸ்தாபிக்கவேண்டும். காட்டிலோ, நதிக்கரையிலோ, ஸமுத்ரத்திற்கு அருகிலோ அல்லது வேறு இடங்களான குளக்கரையிலோ, தோட்டத்திலோ அல்லது அதைக்காட்டிலும் வேறான இடத்திலோ (பெருமாளை) ஸ்தாபிக்கவேண்டும்.

## आलयद्वारस्योत्तमत्वादिकम्

प्राग्द्वारमुत्तमोत्तमं, पश्चिमद्वारमुत्तमं, दक्षिणद्वारं मध्यमं, उत्तरद्वारमधमम् ।

**ஆலயத்வாரஸ்யோத்தமத்வாதிகம்**

ப்ராக்த்வாரமுத்தமோத்தமம், பச்சிமத்வாரமுத்தமம், தக்ஷிணத்வாரம் மத்யமம், உத்தரத்வாமதமம்.

**ஆலயத்தின் வாயிற்புறத்தின் சிறப்பு**

கிழக்குமுகமாக வாயிலிருப்பது மிகச்சிறந்தது; மேற்கு முகமாக வாயிலிருப்பது சிறந்தது; தெற்குமுகமாக வாயில் இருப்பது நடுத்தரமானது; வடக்கில் வாயிலிருப்பது அதமமாகும்.

## एकानेकमूर्ति विधानम्

सहस्र विप्राऽधिक ग्रामादौ मध्ये विष्णुमनेकमूर्ति-विधानेनाऽर्चयेत्, अशक्तश्चेदेकमूर्तिविधानेन वा । तन्न्यूने,

पञ्चविंशतिद्वयादर्वागपि पञ्चमूर्ति प्राङ्मुखं प्रत्यङ्मुखं अनेकमूर्ति वा, अन्येषां नगर्यादीनां पश्चिमे च एकमूर्ति विधिना विष्णुं प्रतिष्ठाप्यार्चयेदित्याह मरीचिः ।।

।। इति श्रीवैखानसे मरीचिप्रोक्ते विमानार्चनकल्पे
भूपरीक्षाऽऽलयदेशविधिर्नाम द्वितीयः पटलः ।।

**ஏகாநேகமூர்த்தி விதானம்**

ஸஹஸ்ர விப்ரா.திக க்ராமாதௌ மத்யே விஷ்ணு-மனேகமூர்த்தி விதானேனார்ச்சயேத். அசக்தச்சேதேக மூர்த்திவிதானேன வா . தன்ந்யூனே. பஞ்சவிம்சதி த்வயா-தர்வாகபி பஞ்சமூர்த்திம் ப்ராங்முகம் ப்ரத்யங்முகம் அநேகமூர்த்திம் வா. அந்யேஷாம் நகர்யாதீனாம் பச்சிமே ச ஏகமூர்த்தி விதிநா விஷ்ணும் ப்ரதிஷ்டாப்யார்சயேதித்யாஹ மரீசி:॥

॥ இதி ஸ்ரீவைகானஸே மரீசிப்ரோக்தே விமானார்ச்சனகல்பே
பூபரீக்ஷாऽऽலயதேசவிதிர்நாம த்விதீய: படல ॥

**ஒரு மூர்த்தியோ, பல மூர்த்திகளோ ப்ரதிஷ்டை செய்யும்விதி**

ஆயிரத்திற்கும் அதிகமான ப்ராம்மணர்கள் வசிக்கும் கிராமங்களில் விஷ்ணுவை அனேக மூர்த்தி விதானமாக அர்ச்சிக்கவேண்டும். முடியாவிட்டால் ஒரே மூர்த்தியை எழுந்தருளச் செய்து அர்ச்சிக்கவேண்டும். ப்ராம்மணர்கள் ஐம்பது எண்ணிக்கைக்கும் குறைவாக வசிக்கக் கூடிய கிராமத்தில் ஐந்து மூர்த்திகளை கிழக்கு முகமாகவோ, அனேக மூர்த்திகளை மேற்குமுகமாகவோ. மற்ற நகரங்களில் மேற்கில் ஒரு மூர்த்தியை விதிப்படி ப்ரதிஷ்டை செய்து அர்ச்சிக்க வேண்டும் என்பதாக மரீசி கூறுகிறார்.

இவ்வாறு ஸ்ரீவைகானஸத்தில் மரீசியால் சொல்லப்பட்ட விமானார்ச்சன கல்பத்தில் பூ பரீக்ஷை, ஆலயம் அமைக்கத் தகுந்த இடம் கூறுதல் என்பதாக இரண்டாவது படலம் முற்றும்.

